பராவித்யா வழங்கும்

# தன்னை அறியும் தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## அறிமுகம்!



பராவித்யா டெலிகிராம் குழு

ஸ்ரீ குருப்யோ நம:

ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:

# பராவித்யா வழங்கும்

# தன்னை அறியும் தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## அறிமுகம்

ஹரி ஓம்!

அனைவருக்கும் ஆத்ம நமஸ்காரங்கள்.

ஒன்றாக மட்டும் இருக்கின்ற ஏகத்துவத்தை பரப்பிரம்மத்தை, பரமானந்தத்தை, பரிபூரணத்தை மனிதர்கள் பலவாறாக அழைத்துக் கொண்டு, அவைகளில் ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்கிக் கொண்டு, அந்த ஒன்றை எளிதாக விளங்கிக் கொள்ள முடியாத நிலைக்கு அவர்கள் தள்ளப்படுவதற்குக் காரணம், பொதுவாக மனிதர்களிடம் உள்ள மனம் இரண்டு கூறுகளாக பிரிந்து செயல்படுவதினால், இந்த இருமைகளின் காரணமாக, அவர்களால் அந்த ஒன்றேயான ஏக வஸ்துவை எளிதாக அறிந்துக் கொள்ள முடியாமல் இருக்கின்றது.

அதற்குக் காரணம், விக்ஷேபம் (தோன்றுதல்), ஆவரணம் (மறைத்தல்) என்று இரண்டு கூறுகள் மனதிற்கு உள்ளது.

எவ்வாறு, நம் அன்றாட நடைமுறை வாழ்க்கையில் தினசரி அனுபவத்தில் இருக்கின்ற ஒரே சூரியன் கிழக்கே தோன்றி, மேற்கே மறைந்து விடுவதைக் காணும் பொழுது, அறியாமையில் இருக்கின்ற சிறு குழந்தைகள் அதை தினம் ஒரு சூரியன் புதிது, புதியதாக உதித்து வருவதாக எடுத்துக் கொள்கின்றது.

அதே குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களான பிறகு, அது ஒரே ஒரு சூரியன்தான் அது தோன்றுவதும் இல்லை, மறைவதும் இல்லை, இந்த பூமி சுற்றுவதினால், இந்த தோற்றம், மறைவு உண்டாகின்றது என்ற உண்மையை அறிந்துக் கொள்கின்றது.

இந்த உண்மை அந்த குழந்தைக்கு எப்பொழுது புரிந்தது?

ஆளும் வளர்ந்து, அறிவும் வளர்ந்தவுடன் புரிந்து விட்டது!

அதற்கு முன்பு, என்னதான் அந்தக் குழந்தைக்கு மற்றவர்கள் உண்மைத் தன்மையை எடுத்துக் கூறினாலும், அதற்கு ஏற்றுக்கொள்ள முடியாது. காரணம், அந்த அளவிற்கு அதற்கு அறிவு முதிர்ச்சி உண்டாகவில்லை.

எவ்வாறு இந்த ஒரே ஒரு சூரியன் விசயத்தில், இந்த உண்மையைப் புரிந்துக் கொண்ட அதே குழந்தை, வளர்ந்து பெரியவர்களாக ஆகிவிட்ட பொழுதும், ஒரே ஒரு பரம்பொருள் மட்டுமே இருக்கின்றது என்பதையும் ஏற்க மறுக்கின்றது.

காரணம், அந்த மெய்ப்பொருளைப் பற்றிய அறியாமை அதனிடம் இருப்பதினாலும், அதைப் பற்றிய தவறான விசயங்களை, தவறான பாடத்திட்டங்களினால், தவறாகவே ஏற்றி வைத்துக் கொண்டதினாலும், ஆள் வளர்ந்த அளவிற்கு, கூடுதலான அறிவு வளர்ச்சியை எட்ட முடியாத சூழ் நிலைக்கு அந்தக் குழந்தை தள்ளப்பட்டு, இன்று வரை வயது முதிர்ந்தும்கூட இறைவனைப் பற்றிய குழப்பத்தில் இன்னும் இருப்பதினாலேதான், இத்தனை கடவுள்கள், இத்தனை மதங்கள் இந்த மனித சமுதாயத்தில் உண்டாயின.

அதாவது, ஆள் வளர்ந்த அளவிற்கு அறிவு வளர்ச்சி அடையாத பொழுது, அவர்களைப் பொருத்தவரையில் தாங்கள் கற்றுக் கொண்டதே சரி! என்ற கண்ணோட்டத்தில் மட்டுமே இருப்பர்கள். அவர்கள் ஏற்றி வைத்துக் கொண்ட அறிவு அப்படி.

எப்படி, இந்த **உலகம் உருண்டை** என்று முதன்முதலில் கூறிய பொழுது, அதை ஏற்றுக் கொள்ளாத மக்கள், நடைமுறையில், அனுபவத்தில் அப்படிக் காணாததால், இந்த கடல் நீர் சமமான நிலப்பரப்பிலேதான் தங்கி இருக்க முடியுமே தவிர, உருண்டையான நிலப்பரப்பிலே நீர் கீழே சிந்திவிடாதா? என்று கருதிக் கொண்டு, அதைக் கூறியவரை கொன்று விட்டார்களே, அதைப் போன்றுதான் இன்றைய மக்களும் பல்வேறு இறைக்கொள்கைகளை இவர்களுக்குப் பிடித்தமான வழியில் பிடிவாதமாக பிடித்துக் கொண்டு காணப் படுகின்றார்கள்.

உண்மையை எடுத்துக் கூற வருகின்றவர்களை ஏற்றுக் கொள்ள மறுக்கின்றார்கள். மேலும், ஏளனமாகப் பார்க்கின்றார்கள்.

ஏன்?

இவர்கள் அறிந்து வைத்துள்ள, அதாவது, தங்கள் மனதில் சிறு வயது முதல், ஏற்றி வைத்துக் கொண்ட விசயங்களுக்கு முரண் பட்டதாக இருப்பதினால், இவைகளை ஏற்க மறுக்கின்றார்கள்.

கூற வருகின்ற கருத்துக்களை, கொடுக்கப்பட்ட பகுத்தறிவின் வாயிலாக, விசாரித்துப் பார்க்கவும் முயற்சியை மேற்கொள்ள மாட்டேன் என்கின்றார்கள். அந்த அளவிற்கு இவர்களுக்கு பிடித்தமான அந்த இறைவனுடன் இணைந்து விட்டார்களா? என்றால், அப்படியும் கூறி விட முடியாது.

காரணம், இவர்கள் வழிபடுகின்ற கடவுள்களின் வாயிலாக இவர்கள் நினைத்த காரியம் ஆகவில்லை என்றால், மற்ற கடவுள்களிடம் முறை இடுவதற்கு, கடவுளையே மாற்றிக் கொள்கின்றார்கள்.

இன்னும் சிலர் மதங்களை மாற்றிக் கொண்டு, அந்த மதத்தில் உள்ள கடவுளிடம் சக்தி அதிகமாக இருக்கும் எனக் கருதி, தங்களுக்கு ஆக வேண்டிய காரியத்தை அந்த மதக் கடவுளிடம் மன்றாடுகின்றார்கள்.

இதுதான் இன்று வரை, இந்த மனித சமுதாயத்தில் நடை முறையில் காணப்படுகின்ற சம்பவங்கள். இதற்கு மறுப்பு யாரும் கூற முடியாது. ஏன் எனில், இன்றும் மதம் மாறுகின்ற மக்கள் இருப்பதினால், நாம் இதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

படைக்கப்பட்ட உயிரினங்களிலேயே ஆறாவது அறிவாகிய பகுத்தறிவு படைத்தவன் மனிதன் என்று நாம் பெருமைப்பட்டுக் கொள்ளும் அளவிற்கு அப்படி ஒன்றும் பிரத்யேக **அறிவு** மனிதனிடம் உண்டாகி விடவில்லை, இன்னும்கூட மிருகங்களைப் போன்றே ஐந்தறிவுடன்தான் அனேக ஜெனங்கள் வாழ்கின்றார்கள். அந்த அளவிற்கு அறியாமையில் இந்த மக்கள் இருப்பதற்குக் காரணம், இவர்களுக்கு **'அறிவு'** என்றால் என்ன? என்பதே புரியவில்லை.

படித்தால் மட்டும் போதாது, எதைப் படிக்க வேண்டும், எப்படிப் படிக்க வேண்டும் என்ற அடிப்படை உண்மையைக் கூட அறிந்துக் கொள்ள மறுக்கின்றார்கள். மேலும், நவீனக் கல்வித் திட்டத்தின் திட்டமிட்ட வியூகத்தில் சிக்கிக் கொண்டுள்ளார்கள்.

அதனால்தான் இந்தக் கல்வியின் வாயிலாக கற்பிக்கப்பட்ட இன்றைய மக்கள் காசுக்கு ஓட்டு போடுகின்றார்கள். அதைத்தான்

அரசாட்சி செய்கின்ற அரசியல்வாதிகளும் வரவேற்கின்றார்கள். இவர்களுக்கு வேறு கல்வி முறைகளில் கல்வியைக் கொடுத்து, இவர்களுக்கு **அறிவு** வந்துவிட்டால், தங்களது ஆட்சி கவிழ்ந்து விடும் என்ற கவலை அவர்களுக்கு.

படித்ததினால் மட்டும் அறிவு பெற்றுவிட முடியாது. சொல்லிக் கொடுப்பதை புரிந்துக் கொள்ளக்கூடிய ஒரு **அறிவு** ஏற்கனவே நம்மிடம் சுயமாக உள்ளே உள்ளது என்பதை ஏற்றுக் கொள்ள முடியாத அளவிற்கு, இவர்கள் ஏற்றி வைத்துக் கொண்ட அறிவு, (சூரியனை மேகம் மறைப்பதுப் போன்று), இவர்களது **சுய அறிவை** மறைத்துக் கொண்டுள்ளது.

*இதுதான் மிகப்பெரிய அறியாமை.*

இன்றைய இளைய தலைமுறைக்குக் கற்றுக் கொடுக்கின்ற கல்வி அவர்களை மனிதனாக மாற்றுவதற்கு பதிலாக, மிருகமாக மாற்றிக் கொண்டிருக்கின்றது என்பதை அறியாமலேயே, அறிவியல் வளர்ச்சி என்று, பல ஆய்வுகளை ஏற்படுத்தி, இன்னும் பல இன்னல்களை இந்தக் கல்வியின் வாயிலாக எதிர்கொள்கின்றார்கள்.

அதற்கு ஒரு முன்னோட்டம்தான், நாம் இன்று எதிர் கொண்டிருக்கும் **'கொரோனா'** என்ற மிக வலிமையான கிருமியின் நோய்த் தொற்று என்பது. இந்த மொத்த உலகமே இதில் ஆட்டம் கண்டுள்ளது. ஆனால், இதில் யாருக்கும் சமூக அக்கரை இல்லை. அதற்குக் காரணம் அவர்கள் ஏற்றி வைத்துக் கொண்டுள்ள அறிவு, சுயநலமாக மாறி விட்டதினால், தன் சந்தோசத்தை மட்டுமே, தன்னுடைய பாதுகாப்பை மட்டுமே எதிர்ப்பார்க்கின்றார்கள். மற்றவர்கள் எப்படியோ போகட்டும் என்ற சமூக அக்கரையின்மையே அவர்களிடத்தில் அதிகம் காணப்படுகின்றது.

ஆனால், இந்த மனித சமூகம் மிகப்பெரிய வலிமையுடன், அறிவு வளர்ச்சியில் மேன்மைப் பொருந்தி இருந்த காலம், இதே நம் பாரத தேசத்தில் அன்று இருந்து இருக்கின்றது.

அதுவே, **மனிதர்கள் வாழ்ந்த மகத்தான பொற்காலம்** எனலாம்.

அந்த காலத்தில் ஆனந்தமாக வாழ்ந்தவர்களை, வந்தாரை வாழ வைத்தவர்களை, பாரதத்தில் வாழ வந்த மற்றவர்கள், நம் வாழ்க்கையின் வாழ்வியல் முறை ஆனந்தத்தை எடுத்துச் செல்ல ஆசைப்பட்டு, பல்வேறு படையெடுப்புகளையும், ஆட்சிகளையும் வேற்று மதத்தினர்களால் இந்த பாரத தேசத்தில் நிகழ்த்தப்பட்டது.

அதில் பலர் பல ஆண்டுகளாக இந்த பாரத மண்ணிலேயே அரசாண்டு, இங்கு இருந்த புறச் செல்வ வளங்கள் அனைத்தையும் எடுத்துச் செல்ல முடிந்ததே தவிர, அகச் செல்வ வளமான மனிதன் **தன்னை அறியும் மகத்தான ஆனந்தத்தை** மற்றவர்களால் எடுத்துச் செல்ல முடியாமல் போனது. அதற்குக் காரணம், *அது புறத்தில் இல்லை. நம் அகத்தில் இருக்கின்றது* என்பதினால் அவர்களால் அதை எடுத்துக் கொண்டு செல்ல முடியவில்லை.

அதனால், அவர்கள் மீண்டும், மீண்டும், நம் பாரத தேசத்தை நோக்கியே, இந்த அகச் செல்வத்தை அடைய, திரும்பவும் இந்த இந்தியாவிற்கே கற்றுக் கொள்ள திரும்பி வந்துக் கொண்டிருக் கின்றார்கள். இன்னும், அதை நம்மிடம் இருந்து தேடிக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், நாமோ, அவர்களை நம் அகச்செல்வங்களை கற்க அனுமதித்து விட்டு, நாம் அவர்கள் கற்று வீணாய் போன விவேகமற்ற நவீனக் கல்வியை, புற அறிவுக் கல்வியாக காசு கொடுத்துக் கற்றுக் கொண்டிருக்கின்றோம்.

அத்தனைக்கல்வி நிறுவனங்களிலும், இன்றைய அரசியல் வாதிகளின் ஏகப்பட்ட பணத்தில், ஏகப்பட்ட பங்குகள் வாங்கப் பட்டுள்ளதினால், அனைத்து கல்விகளுக்கும் இன்று பணம் கொடுக்க முடியாத அளவிற்கு, கல்வியின் விலை பன்மடங்கு உயந்துள்ளது. அதன் பலனாக பலத்துறைகளில் ஆசைகளை மாணவர்கள் மனதில் விதைத்து, அனைவரையும் மருத்துவர்களாகவும், பொறியியல் வல்லுனர்களாகவும் மாற்றி விட்டு, இன்று அதற்கான வேலை வாய்ப்புகள் இல்லாமல், மீண்டும் பழைய கல்வி திட்டங்களை நவீனமாக்கி, அதிலும் காசு பார்க்கின்றனர். இவ்வாறு, இந்த நவீன கல்வியின் வாயிலாகவும், நவீன மருத்துவத்தின் வாயிலாகவும், பாமர மக்களிடம் பணம் பறிக்கின்றனர் இத்தகைய தொழில் பங்குகளை (ஷேர்கள்) வாங்கிக் குவித்துள்ள பகுத்தறிவுவாதிகள்.

அவைகளைக் கூட அறிய முடியாத அளவிற்கு, கற்றுக் கொடுக்கின்ற கல்வியைப் பற்றி, கேள்வி கேட்க முடியாத அளவிற்கு நாம் பின் தங்கியுள்ளோம் என்பதைப் பார்க்கின்ற பொழுது, நாம் எவ்வளவு அறியாமையில் இருக்கின்றோம் என்பதை, சற்று ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நம்முடைய பாரத தேசத்தில் பிறந்த அன்றைய நம் முன்னோர்கள் எந்த அளவிற்கு அறிஞர்களாக வாழ்ந்தனர் என்பதைக் கூட, நாம் இன்று அறிந்துக் கொள்ள முடியாத அளவிற்கு நவீனக் கல்வியில் மாற்றம் ஏற்பட்டுள்ளதை அறியாமல் இருக்கின்றோம்.

அந்த வகையிலே நாம் பலருக்கும் அன்று கற்றுக் கொடுத்த உலகத்தின் முன்னோடியாக பல்கலைக்கழகமாக விளங்கிய நம்முடைய **'நாலந்தா பல்கலைக்கழகம்'** நம் நாட்டில் பிழைக்க வந்தவர்களால் அழிக்கப்பட்டு, இன்றைய இந்தியாவில் சிதிலமடைந்து இருக்கின்றது.

அது, அன்று பல அறிஞர்களை இந்தியாவில் உண்டாக்கிய மிகச்சிறந்த பல்கலைக்கழகமாக இருந்து, நம் பாரததிற்குப் பெருமை சேர்த்த கல்விச்சாலை எனலாம்.

அங்கு கற்றுக் கொடுக்கப்பட்டது அனைத்துமே மனம் சார்ந்த மெய்ஞ்ஞானக் கல்வி என்பதினால், அதன் அடிப்படையில்தான் மிக உயர்ந்த அறிஞர் பெருமக்கள் நம் பாரத தேசத்தில் அன்று தோன்றினர்.

அதன் பிறகு வந்த ஆங்கில கல்வி முறையில் நம் நாட்டில் மெய்ஞானிகளுக்குப் பதிலாக விஞ்ஞானிகள் மட்டுமே உண்டாயினர்.

அன்று கற்றுக் கொடுத்த கல்வி மெய்ஞானக் கல்வி என்பதினால், மனிதன் மனிதனாக இருப்பதில் இருந்து, அதற்கும் மேலாக கடவுளாக உயர்ந்தான்.

ஆனால், இன்று கற்றுக் கொடுக்கின்ற விஞ்ஞானக் கல்வியினால், மனிதன் மனிதனாக இருப்பதில் இருந்து, தாழ்ந்து மிருகமாக மாறி வருகின்றான்.

இன்றைய நவீன கல்வியில் கற்றுக் கொடுக்கப்படுகின்ற விசயம் எப்படியெல்லாம் பணம் சம்பாதிப்பது என்ற ஒன்றை மட்டுமே மாணவர்களின் மனதின் ஆழமாக விதைக்கப்படுகின்றது. அதற்கேற்ற பணத்தேவைகளை அவர்களிடம் கல்விக்கட்டணமாக வசூலித்து, அவர்களையும் பணத்தின் தேவைக்காக மட்டுமே, ஓடவேண்டிய கட்டாய வாழ்க்கை முறை கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது.

இதை நேரடி அனுபவமாக, நாம் இன்று அனுபவித்து வருகின்ற வாழ்வியல் உண்மைகள் நமக்கு உணர்த்தும்.

உதாரணமாக, தற்போதைய சர்வதேச பிரச்சனையாக மனிதர்கள் எதிர்கொள்ளும் **கொரோனா** நோய் தொற்றில்கூட மனிதனிடம், மனித நேயத்தைப் பார்க்க முடியவில்லை. அதிலும் பணம் சம்பாதிக்கத்தான் பார்க்கின்றார்கள்.

எதை எடுத்தாலும் பணம் மட்டுமே பிரதானமாக இருக்கின்றது. எந்த விசயத்தை மக்களுக்கு கொண்டு சேர்ப்பதாக இருந்தாலும், அங்கும் பணமே பிரதானமாக இருக்கின்றது. எல்லாம் பணத்தை மையமாக வைத்தே காரியங்கள் ஆற்றப்படுகின்றன.

இதுதான் மெய்ஞானக் கல்விக்கும், விஞ்ஞானக் கல்விக்கும் உள்ள வித்தியாசம்.

மெய்ஞ்ஞானக் கல்விக்கும், விஞ்ஞானக் கல்விக்கும் என்ன வித்தியாசம் என்று கேட்டீர்களேயானால், மெய்ஞ்ஞானம் என்பது மனிதனுக்கு கொடுத்திருக்கின்ற பிரத்யேகமான மனம் என்ற கண்ணிற்குத் தெரியாத சூக்ஷும சக்தியை, அதன் தன்மைக்கு ஏற்றவாறு, நாமும் கண்ணிற்குத் தெரியாத சூக்ஷும நிலையிலேயே மனதை உள்முகமாக விசாரித்து, நம்முடைய உண்மையான இருப்பை, மகத்தான அறிவை அறிந்துக் கொள்கின்றோம்.

**இது உள்ளே இருந்து வெளிப்படுகின்ற அறிவு.**

இதனால், மனிதன் புனிதனாக உயர முடிந்தது.

இதைத்தான் அன்றைய மெய்ஞ்ஞானிகள் மற்றவர்களுக்கு கற்றுக் கொடுத்தார்கள்.

ஆனால், இந்த விஞ்ஞானக் கல்வியோ, கண்ணிற்குத் தெரியாத மனதை நல்வழியில் மாற்றுவதற்கான மாற்றத்தை நடைமுறையில்

அறியாமல், இந்த கண்ணிற்குத் தெரிகின்ற உடலில் இருக்கின்ற புலன்களை மையப்படுத்தி பாடங்கள் பயிற்றுவிக்கப்படுவதினால், **இவைகள் வெளியே இருந்து கட்டாயமாக திணிக்கப்படுகின்ற புற அறிவாக மட்டுமே உள்ளது.**

இதுப்போன்ற பாடங்களை பயிலும் மாணவர்கள் கண்ணிற்குத் தெரியாத சூக்ஷும மனதை மாற்றுகின்ற வழிமுறைகள் தெரியாமல், ஏற்றி வைக்கப்பட்ட ஏகப்பட்ட அறிவின் காரணமாக, அந்த அறிந்துக் கொண்ட புத்தி சக்திக்கு ஏற்றவாறு, மனம் போன போக்கில் தங்கள் வாழ்க்கையை வாழ்வதினால் வந்த விளைவு நாம் இன்று காணும் இந்த உலகத்தின் தற்போதையப் போக்கு.

ஆகவே, இருக்கின்ற ஏகப்பொருளை அறிந்து, அதுவே எல்லாமாக இருக்கின்றது என்பதை அறிந்துக் கொள்ளும் போது, மனிதன் மகத்தானவனாக மாறி, அனைத்து உயிர்களையும் நேசித்து, எல்லோரும் இன்புற்று இருக்கின்ற இனிமையான, சொர்கமான உலகத்தை இவன் படைத்துக் கொண்டு, அந்த முழுமையான ஆனந்தத்தை, அந்தக்கரணமான மனதின் வாயிலாகவும், புறக்கரணங்களான கண்களின் வாயிலாகவும் காண முடியும்.

அதற்கு ஒரே வழி, நாம் மீண்டும், அத்தகைய மெய்ஞானத்தை உபதேசிக்கும் பாடங்களை பயின்று, பல்வேறு வகைகளில் நம் வாழ்க்கையை அற வழியிலே வாழ்ந்து, **“அறம், பொருள், இன்பம், வீடு”** என்ற சனாதன தர்மத்தின் வாழ்வியல் நெறிமுறைகளில் வாழ்ந்து வளமான எதிர்காலத்தை அமைத்துக் கொள்ள முடியும்.

அதற்கான பாடத்திட்டங்கள் இலவசமாக இந்த டெலிகிராம் இணையதளத்தின் வாயிலாக, எளிய தமிழ் வேதாந்த வழியில் பயிற்று விக்கப்பட உள்ளது.

ஆனால், இங்கு நாம் எதிர்பார்க்கின்ற அளவிற்கு மாணவர்களின் சேர்க்கை இருந்தால் மட்டுமே, இந்த வகுப்புகள் இணையதள ***“பராவித்யா டெலிகிராம் குழுவின்”*** வாயிலாக, MP3 ஆடியோ, வீடியோ மற்றும் PDF பாடப் புத்தகங்களாக கொடுக்கப்படும்.

இது ஜாதி, மதங்கள் கடந்த பாடத்திட்டங்கள் என்பதினால், எந்த மதத்தினர் வேண்டுமானாலும் இந்த பாடங்களைப் பயில்வதற்கு, இந்தக் குழுவில் ஜாதி, மதம் வித்தியாசம் இன்றி இணையலாம்.

ஒரே தகுதி **ஆறு அறிவு படைத்த** மனிதனாக இருக்க வேண்டும்.

அவ்வளவே!

இது, கடவுளை மையமாக வைத்து போதிக்கப்படுகின்ற பாடங்கள் கிடையாது.

உண்மையில் கடவுள் யார்? உயிர்கள் யார்? இந்த உலகம் என்ன? என்பதைப் பற்றிய உண்மையை உரைக்கின்ற உன்னதமான சனாதன தர்மத்தின் அரிய வகைப் பாடங்கள்.

அவைகளை நம்மிடையே காணப்படுகின்ற இந்து மதத்திற்கு உட்பட்ட, வேதத்தின் பாடங்கள் என்று எடுத்துக் கொள்ளக்கூடாது.

இது எந்த மதங்களுமே தோன்றாத காலத்தில், ஆதியில் கொடுத்த அரிதான பாடங்கள். மேலும், மனிதனை மகத்தானவனாக மாற்றிய மகத்தான பாடங்கள்.

இன்றைய நவீன விஞ்ஞானத்திற்கு ஆணிவேராக விளங்குகின்ற மெய்ஞ்ஞானப் பாடங்கள். இது மொழி பிறப்பதற்கு முன்பே,

மனிதர்கள் தங்கள் காதுகளால் கேட்டு, மற்றவர்களுக்கு காதுகள் வழியாகவே உரைக்கப்பட்ட உபதேசப் பாடங்கள்.

ஆதலால், இது சமஸ்கிருத மொழி வேதங்கள், தமிழ் மொழி வேதங்கள், இஸ்லாமிய வேதங்கள், கிருஸ்துவ வேதங்கள் என்ற பிரிவினைக்கு அப்பாற்பட்டது.

இன்றைய இளைய தலைமுறைகளுக்கு முற்றிலும் அறிமுகம் இல்லாதது.

இந்த பாடங்களை நவீன விஞ்ஞானக் கல்வியில் கற்றுக் கொடுக்கின்ற அளவிற்கு அறிந்துக் கொண்ட ஆசிரியர்கள் கிடையாது.

இது முழுக்க முழுக்க தனி நபர், தனிப்பட்ட முறையில், தன்னுடைய மனதை தானே விசாரித்து, விபரம் அறிந்துக் கொண்ட மிகவும் அரிதான பாடத்திட்டங்கள்.

இது ஒரு மாணவனுக்கும், குருவுக்கும் நேரடி விசாரத்தின் வாயிலாக வெளிப்பட்ட அக அறிவின் அடிப்படையான பாடங்கள்.

வேதாந்தம் என்பது வேதத்தின் இறுதிப் பகுதி என்று அழைக்கப்பட்டாலும், இதற்கு முன்பாகவே சனாத தர்மத்தின் ஆதி வேதத்தை அடிப்படையாகக் கொண்ட **தத்துவ நோக்குகள்** ஆகும்.

இவைகளை, *ஆறு வேத தரிசனங்கள்* என்று பிற்காலத்தில் வந்தவர்கள் அழைத்தனர்.
‘

*அத்தகைய வேத தரிசனங்களும், அவற்றின் நிறுவனர்களும் பின்வருமாறு:*

நியாயம் - கௌதமர்

வைசேடிகம் - கணாதர்

சாங்கியம் - கபிலர்

யோகம் - பதஞ்சலி

மீமாம்சை (பூர்வ மீமாம்சை) - ஜைமினி

வேதாந்தம் (உத்தர மீமாம்சை) - பாதராயணர்

இவற்றுக்கு இடையிலான ஒற்றுமைகளைக் கருத்திற்கொண்டு இந்த ஆறு தரிசனங்களும், இரண்டிரண்டாகச் சேர்த்து மூன்று தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

*அவை பின்வருமாறு:*

நியாயம் - வைசேடிகம்
சாங்கியம் - யோகம்
மீமாம்சை - வேதாந்தம்

இவை ஒவ்வொன்றும், பல்வேறு காலப்பகுதிகளிலும் எழுதப்பட்ட வேதப்பகுதிகளில் சிதறிக்கிடக்கும் கருத்துக்களை, தங்களுக்கே உரிய முறைகளில் ஒழுங்கு படுத்தியும், ஒருமுகப் படுத்தியும் தருகின்றன.

இந்த ஒவ்வொரு பிரிவையும் நிறுவியவர்களாக அறியப் படும் ரிஷிகள், இவற்றுக்குரிய **"சூத்திர நூல்களை"** அவர்கள் தாய் மொழியில் இயற்றியுள்ளார்கள்.

இவைகளை *ஆத்திக* அல்லது *வைதிக தரிசனங்கள்* என்பர்.

வேதத்தை ஏற்றுக்கொள்ளாத நான்கு *நாத்திக* அல்லது *அவைதிக தரிசனங்களும்* அவற்றை நிறுவியவர்களும் உள்ளனர்.

*அவைகளும், அந்த மதங்களை நிறுவியர்களும் பின்வருமாறு:*

சார்வகம் எனும் உலகாயதம் ஆசீவகம்

**<u>மூவகைச் ஜைனம் (சமண மதம்)</u>**

1 திகம்பரர், 2 சுவேதாம்பரர், 3 **யாபனியம் - மகாவீரர்.**

**<u>நால்வகை பௌத்தம் (புத்த மதம்)</u>**

ஈனயான பௌத்தப் பிரிவுகள் 1 சௌத்திராந்திகம் 2 வைபாடிகம் ;

மகாயான பௌத்த பிரிவுகள் 3 மாத்தியமிகம் 4 **யோகசாரம் - கௌதம புத்தர்**

இதைத்தவிர இன்று முதல் 2000 ஆண்டுகளுக்குள் வந்த இஸ்லாம் மற்றும் கிறிஸ்துவம் என்று அனேக மதங்கள் பெருகியது.

அதே போன்று, இந்து சமயத்தில் பல புதிய சமயங்கள் பலவாறாகத் தோன்றின. அவைகளுக்குள் உட்பூசல்கள் நிகழ்ந்து, அதை அன்றைய ஆதிசங்கரரின் வாயிலாக ஆறு சமயங்களாகப் பிரித்து **சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்தியம், சௌரம்** என்று உண்டாக்கப்பட்டு, அவரவர்களுக்குப் பிடித்தமான கடவுளை வழிபட வழிவகுத்துக் கொடுக்கப்பட்டன.

ஆனால், இதுப்போன்று சமயங்களும், மதங்களும் மட்டுமே மனிதர்களிடம் பலவாறாகப் பெருகியதே தவிர, மனித நேயம் மட்டும் இந்த மக்கள் படைத்துக் கொண்ட மதங்களால் இன்றுவரை உண்டாகவில்லை.

காரணம், அவரவர்கள் மதத்தை வளர்க்க, அவரவர்கள் மேற்கொள்கின்ற முயற்சியின் காரணமாக, மற்ற மதங்களை நசுக்கும் எண்ணத்தில் மனித நேயம் பறிப்போனதுதான் இந்த மதங்கள் உண்டானதில் மிச்சம்.

இதுப்போன்றே சமயச் சண்டைகளும் சைவம் - வைணவம் போன்ற சமயங்களில் பெரிதாக நடந்து, அதன் காரணமாக அன்றைய சைவ மன்னர்களால், வைணவ இராமானுஜ ஆச்சாரியர் நாடு கடத்தப்பட்டு, கர்நாடகாவில் ஒழிந்து வாழ்ந்த வரலாற்றை நாம் மறுந்து விட்டோம்.

இதுப்போன்றே, சைவ சமயத்தினர்களுக்கும், சமண சமயத்தினருக்கும் கடும் சண்டைகள் நடைப்பெற்று, அன்றைய சைவ சமய மன்னர்களால் சமணர்கள் கழுவேற்றிக் கொல்லப்பட்ட வரலாற்றினை நாம் நினைத்துப் பார்க்க மறந்து விட்டோம்.

கடவுள் இதைத்தான் விரும்புவாறா?

சமயங்களிலே பிரிவினைகளை உண்டாக்குவது கடவுளா?

இவர்கள் படைத்த கடவுள்களே இவர்களைக் காப்பாற்றாமல் விட்டு விட்டதே. அதனால் வெற்றி பெற்றவன் தங்கள் கடவுள்கள் உயந்தது என்றும், தோல்வி அடைந்தவனின் கடவுள்கள் தாழ்ந்தது என்ற கடவுளர்களில் பெயரால் பிரிவினை உண்டாக்கப்பட்டது.

யோசித்துப் பாருங்கள்!

மனிதர்கள் தங்கள் சுய நலத்தினால், அவர்கள் கடந்து வந்த பாதைகள் எப்படி கரடு, முரடாக மாறி இருக்கின்றது?

இதில் இனிமேலும், மனிதன் மதங்களைக் கடந்து, சமயங்களைக் கடந்து மனித நேயத்துக்குள் அடி எடுத்து வைக்கத் தவறினால், இன்று, எப்படி கொடிய நுண்கிருமிகளில் இருந்து தப்பிப்

பிழைக்க வழி தெரியாமல் ஒரு சாரர் விழி பிதுங்கி நிற்க, மற்றொரு சாரர் அதையே தங்களுக்கு சாதகமாக மாற்றிக் கொண்டு, பணத்தை ஆதாயமாக அடைந்து வாழ முயற்சிப்பதைப் பார்க்கின்ற பொழுது, மனித நேயம் முற்றிலும் மடிந்து விட்டதை அல்லவா இவைகள் எடுத்துக் காட்டுகின்றன.

ஏன்? இந்த அவல நிலைக்கு நாம் தள்ளப்பட்டிருக்கின்றோம்?

இதற்கு அடிப்படைக் குழந்தைப் பருவத்தில் இருந்து, மனிதனின் மனதை நல்வழிப்படுத்துகின்ற, **மனதை விசாரிக்கும் பயிற்சி** பயிற்றுவிக்கப்படாததுதான் மிக முக்கியக் காரணம் என்று நன்கு அறிந்துக் கொள்ள வேண்டும்.

அந்த வகையிலே, சிறு குழந்தைகளுக்கு கற்றுக் கொடுக்கப் படுகின்ற கல்வியின் பாடத்திட்டங்களை கவனித்தால், அனைத்துமே நவீன புறப்பொருட்களைப் பற்றிய அறிவாகத்தான் ஏற்றப்படுகின்றதே தவிர, மனம் சார்ந்த, மனிதனின் உள்ளம் சார்ந்த உண்மையைப் பற்றிய அறிவு, அவர்களுக்கு கொடுக்கப்படவில்லை.

அந்த வகையிலே, மனிதன் தன் உள்ளே உள்ள உள்ளம் மாறாமல் உயர்வை அடைய முடியாது. மனித மனம் மாறாமல், மனித நேயம் உண்டாகாது.

முதலில் மனிதன் மனிதனாக வாழக் கற்றுக் கொடுக்க வேண்டும். அதன் பிறகு அவனுக்குள் உண்டாகும் தன்னை அறிந்த மெய்ஞ்ஞானத்தினால், அதன் நேரடி அனுபவத்தினால், அவன் கடவுளாக மாறிவிடுவான். நாம் ஒன்றும் மாற்றத் தேவையில்லை.

இந்த அறிய உண்மையை கற்றுக் கொடுக்கும் நல் நோக்கத்தில்தான், இந்த பாடத்திட்டங்கள் எளிய தமிழ் வழியில், எல்லோருக்கும் கற்றுக் கொடுக்க வரவேற்கப்படுகின்றார்கள்.

இது முழுக்க, முழுக்க **இலவசக் கல்வி** முறையாகவே கற்றுக் கொடுக்கப்படுகின்றது.

இதற்காக அதிக உடல் உழைப்பும், மன உழைச்சலையும் இதனை கற்றுக் கொடுக்க விரும்பும் ஆசிரியர்கள் மட்டுமே அடைய இருப்பதால், அவர்களது **பொன்னான நேரங்களை** இந்த மனித சமுதாயத்தின் **அக்கரையின் காரணமாக** அவர்கள் ஒதுக்குவதால், அவர்கள் கற்றுக் கொடுப்பதற்கான தகுதியான மாணவர்களை வயது வரம்பு இன்றி, மேலும் ஆண், பெண், அலி என்று எந்த வித்தியாசமும் இன்றி தேர்ந்தெடுக்க உள்ளார்கள்.

ஒரே தகுதி **ஆறு அறிவு படைத்த** மனிதனாக மட்டுமே இருக்க வேண்டும். இத்துடன், தமிழ் மொழி தெரிந்தவராக இருக்க வேண்டும்.

மேலும், கற்றுக் கொடுப்பதை அதிக அக்கரையுடனும், ஆர்வத்துடனும் கற்றுக் கொள்ள விருப்பம் உள்ளவராக இருக்க வேண்டும்.

மேலும், புத்திக்கூர்மை சற்று அதிகம் இருப்பின் எளிதாக இந்த பாடங்களை கிரகித்துக் கொள்ள ஏதுவாக இருக்கும்.

இவைகள் மட்டுமே இந்த பாடங்களைப் படிக்கத் தேவையான தகுதிகளாக எதிர்ப்பார்க்கப்படுகின்றன.

ஒவ்வொரு வார இறுதி **சனிக்கிழமை** மற்றும் வாரத்தின் நடுவில் உள்ள **புதன்கிழமை** என்ற இந்த இரண்டு நாட்கள் மட்டுமே பாடங்கள் ஆன்லைனில், **பராவித்யா டெலிகிராம் குழுவில்** கொடுக்கப்படும்.

குழுவில் இணைந்து உள்ளவர்கள் தங்களது சந்தேகங்களை பாட சம்பந்தமாக அந்தக் குழுவிலேயே கேட்டு, மற்றவர்களும்

சந்தேகம் நீக்கிக் கொள்ள ஒத்துழைப்பு நல்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றார்கள்.

மிகவும் முக்கியமான விசயம், இந்தக்குழுவில் சேர்கின்ற மாணவர்களின் எண்ணிக்கையை வைத்தே பாடங்கள் எடுப்பதா, வேண்டாமா? என ஆசிரியர்கள் முடிவு செய்வார்கள்.

இது முழுக்க, முழுக்க அவர்களது சுய விருப்பத்திற்கு உட்பட்டது.

இதில் எந்தவிதமான கட்டாயமும் அவர்களுக்கு கிடையாது. இதற்காக எந்தவிதக் கட்டணமும் ஊதியமாக, அவர்கள் வாங்குவது கிடையாது.

சந்தர்ப்ப சூழ்நிலையின் காரணமாக, ஆசிரியர்களால் பாடங்களை நடத்த முடியாமல் போனால், அதற்கு எந்தவித பொறுப்பும் ஏற்காமல், ஆசிரியர்கள் இந்த பாடத்திட்டங்களில் இருந்து விலகிக் கொள்வார்கள். அது அவர்கள் சொந்த விருப்பம்.

அவர்களை நாம் கட்டாயப் படுத்த முடியாது.

இந்த நிலை உண்டானால், கற்க வந்த மாணவர்களுக்கு கொடுத்து வைத்தது அவ்வளவுதான் என்று நாம் கருதிக் கொள்ள வேண்டுமே தவிர, அவர்களைக் கட்டாயப்படுத்தி, கற்றுக் கொடுத்தாக வேண்டும் என்று கூறவும் முடியாது. அத்தகைய கட்டுப்பாட்டிற்குள் அவர்கள் கிடையவே கிடையாது.

மேலும், இது கட்டாயக் கல்விமுறை கிடையாது.

சமுதாய அக்கரை உள்ளவர்கள், நேரடியாக இந்த சமுதாயத்தை மாற்ற நினைப்பதைக் காட்டிலும், முதலில் தன்னை மாற்றிக் கொண்டு, தன் குடும்பத்தாரை முதலில் நல்வழிகளுக்கு

மாற்றி, அதன் பிறகு தாங்கள் வசிக்கின்ற வீதி, ஊர், நாடு என ஒவ்வொன்றாக மாற வழி வகுக்க வேண்டுமே தவிர, எடுத்த உடனேயே இந்த உலகத்தை மாற்ற நினைப்பது என்பது, அவ்வளவு எளிதில் நடக்காத காரியம் என்பதை அறிந்துக் கொள்ளவும்.

இந்த கல்வி முழுக்க, முழுக்க எந்தவிதமான சுயநல நோக்கத்திலும், ஆதாய நோக்கத்திலும் நடத்தப்படவிலை. இத்துடன் எந்தவிதமான ஆன்லைன் வருமானத்திற்காகவும் நடத்தப்படவில்லை என்பதையும் அறியவும்.

**சேவை மனப்பான்மை உள்ளவர்கள் மட்டுமே, இந்த கல்வியைக் கற்றுக் கொடுக்க இணைந்துள்ளார்கள்.**

இத்துடன், தங்கள் உடலால் ஊக்கத்துடன் மற்றவர்களுக்கு சேவை செய்ய விரும்புபவர்களை மட்டும், இந்த உன்னதப் பணியில் சேர்த்துக் கொள்ள வரவேற்கப்படுகின்றார்கள்.

அவர்களது சேவைகள் ஆன்லைன் பாடங்களை தொகுத்துக் கொடுக்க உதவியாகவும், இணையதள பிரச்சனைகளை சரிசெய்யக் கூடியவர்களாகவும், இயன்ற அளவு பாடங்களை கம்யூட்டரில் டைப் செய்துக் கொடுக்கக்கூடியவர்களாகவும் உள்ளவர்களுக்கு முன்னுரிமை உள்ளது.

இதைத்தவிர, மற்ற உடல் சார்ந்த எந்த உதவிகளையும் இந்த பாடங்களைப் படிக்கும் மாணவர்களுக்கு, மற்றவர்கள் செய்துக் கொடுத்தால் அவைகளை ஏற்றுக் கொள்ளவும் முடியும்.

அதற்கான தகவல்களை இதே முறையில், இதே **'பராவித்யா'** முகநூலில், மற்றும் **'பராவித்யா'** டெலிகிராம் குழுவில் அவைகளை அறிவிக்கப்படும்.

மாணவர்கள் குழுவில் இணைக்க முடியாமல் போவதற்கு ஏதேனும் இணையதள இணைப்பு நடவடிக்கையில் Privacy setting - ல் ஏதாவது லாக் (LOCK) செய்யப்பட்டிருக்கலாம், அதை அவரவர்கள் தொலைப்பேசியில் அவர்களாகவே நீக்காமல், இங்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது. எனவே, அதையும் தாங்கள் மட்டுமே சரிப்பார்த்துக் கொள்ளவும்.

மேலும், இந்தக் குழுவில் இணைய விரும்புபவர்கள் தங்கள் போனில், **டெலிகிராம் ஆப்** இல்லாதவர்கள் அதை தங்களது மொபைல் போனில் பிளே ஸ்டோர் (Play Store) வாயிலாக பதிவிறக்கம் செய்துக் கொள்ளவும்.

குழுவில் இணைக்க முடியாமல் போனவர்கள், கீழே கொடுக்கப்பட்ட தொலைபேசி எண்ணிற்கு குறுஞ்செய்தி (SMS) தகவல்களை கொடுக்கப்பட்டுள்ள **டெலிகிராம் எண்ணிற்கு மட்டும்** அனுப்பலாம்.

மேலும், **“தன்னை அறியும் தமிழ் வழி வேதாந்த பாடங்கள்”** என்ற பாடத்திட்டத்திற்காக **“பராவித்யா”** டெலிகிராம் குழுவில் இணைய விரும்புபவர்கள், அந்தக் குழுவில் முழு மனதுடன், கொடுக்கப்பட்ட பாடங்களை நேரம் ஒதுக்கி, வாரத்தின் இரண்டு நாட்கள் சனி மற்றும் புதன் கிழமைகளில் மட்டும், சில மணி நேரங்கள் ஒதுக்கக் கூடியவர்கள், தங்கள் பெயர்களையும், தொலைபேசி எண்களையும், கீழே கொடுக்கப்பட்டுள்ள எங்களது **தொலைபேசி டெலிகிராம் எண்ணிற்கு** SMS (குறுஞ்செய்தி) ஆக மட்டும் அனுப்பவும்.

*<u>தொலைப்பேசியில் பேசுவதை முழுவதுமாகத் தவிர்க்கவும்.</u>*

## தொலைபேசி எண்:- 94867 55814.

**- சுவாமி பிரபஞ்சநாதன்.**

*(Telegram App தங்கள் தொலைப்பேசியில் கட்டாயம் இருந்தால் மட்டுமே, இந்த எண்ணிற்கு செய்திகளை (SMS) அனுப்ப முடியும். சாதாரண (குறுஞ்செய்திகள்) SMS, எங்களது தொலைப் பேசியில் கவனிக்கப்படாமல் போக வாய்ப்பு உள்ளது.)*

சேருகின்ற மாணவர்களுக்கு வயது, வரம்பு, ஜாதி, மதம் மொழி, இனம், மற்றும் ஆண், பெண், அலி என்ற எந்த வித வித்தியாசமும் கிடையாது. தாராளமாக யார் வேண்டுமானாலும், இந்த பாடங்களை அறிந்துக் கொள்கின்ற ஆர்வம் மட்டும் இருந்தால் இந்தக் குழுவில் இணையலாம். ஆனால் கற்றுக் கொள்ள ஆர்வம் வேண்டும்.

இது பொழுது போக்கிற்கான இணையதள குழு கிடையாது என்பதையும் அவசியம் அறியவும்.

உண்மையிலேயே இந்த பாடங்களை படித்து, பயன் அடைய வேண்டும் என்ற ஆர்வம் இருந்தால் மட்டும் இணையவும்.

வாரம் இரு நாட்கள் சில மணி நேரங்கள் ஒதுக்க முடியும் என்பவர்கள், அதற்கான நேரம் ஒதுக்கி படிக்க விரும்புபவர்கள் மட்டுமே அவசியம் இணைய வேண்டும் என்பதைப் பல முறை அறிவுறுத்தப்படுகின்றார்கள்.

நன்றி!

என்றும் அன்புடன்,

**பராவித்யா டெலிகிராம் குழு.**

**ஓம் தத் சத்!**

பராவித்யா வழங்கும்

# தன்னை அறியும்
# தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## அறிமுகம்!



பராவித்யா டெலிகிராம் குழு